# 10. பந்தாடற் பருவம்

91. சந்திரசூ ரியர்தமைச் சில்லெறிந் தாடவளைச்
சக்கரவா ளக்கிரிதனைச்
சக்கரம தாகவே ராகுகே துக்கயிறு
தான்சுற்றி விளையாடியே

அந்தரத் தாரா கணங்கழற் காயாக
வாடிமக மேருகிரியை
யம்பரந் தனிலாடு பம்பரம தென்னவே
யாயிரம் படமாடுறும்

விந்தைமா ணிக்கநற் கயிறுகொடு [1]விளையாடி
வெள்ளிவே தண்டமொழிய
மேலெண் டிசாமுகமு மூதண்ட கூடத்து
வேதண்ட மத்தனையுமே

பந்துவிளை யாடிவரு [2]மைந்தனைப் பெறுசிறுமி
பந்துவிளை யாடியருளே
பங்கயச் சிவகாம சுந்தரியென் னம்மையே
பந்துவிளை யாடியருளே. [1]

**குறிப்புரை :** சில்லெறிந்தாட - மகிழ்ச்சியுடன் வீசியாட; சில் - குளிர்ச்சி, இங்கு மகிழ்ச்சியைக் காட்டியது. வளைச் சக்கரவாள கிரி - வளைந்த சக்கரவாள மலை; ராகு கேதுக் கயிறு - இராகு கேதுவெனும் பாம்புகளாகிய கயிறுகள்; அந்தரத் தாராகணம் - ஆகாயத்திலுள்ள நட்சத்திரக்கூட்டம்; அம்பரம் - ஆகாயம்; ஆயிரம் படம் - ஆயிரம் தலைகளுடைய ஆதிசேடன்; வெள்ளி வேதண்டம் - வெள்ளி மலை; மேல் எண் திசாமுகமும் மூதண்ட கூடத்து வேதண்டம் - மேலுள்ள எட்டுத் திக்குகளினும் பழைய உலகங்களிலுள்ள மலைகள்;

உமையவளும் அவள் தன் கணவனும் வீற்றிருப்பதனால் "வெள்ளி வேதண்ட மொழிய" என்றார். (1)

*பாடபேதம் : 1. விளையாடும் வெள்ளி, விளையாட வெள்ளி 2. சிறுவனைப் பெறுமிறைவி.*

92. செந்தா மரைப்பதம் [1]பந்தசைந் தாடவிரு
திருமுழந் தாள்பந்துமே
திண்புவி பதிந்தாட வினியபந்துக் [2]கொண்டை
செண்டுடன் பந்தாடவே

நந்தாத குங்குமக் கொங்கைபந் தாடவிரு
நயனங் கழங்காடவே
[3]நவமணி யிழைத்தகுழை செவியிலம் மனையாட
நட்சத்திர மாலையுடனே

சந்திரோ தையச்சுட்டி யுஞ்சலா டப்பணிகள்
சதுரங்கம் விளையாடவே
சதகோடி சிலதியர்கள் புடைசூழ நவகோடி
சத்திய ருடன்கூடியே

பந்தாட வேதண்ட மூதண்ட [4]கூடங்கள்
பந்துவிளை யாடியருளே
பங்கயச் சிவகாம சுந்தரியென் னம்மையே
பந்துவிளை யாடியருளே. [2]

**குறிப்புரை** : செந்தாமரைப் பதம் - செந்தாமரை மலர்போன்ற பாதம்; முழந்தாள் பந்து - முழங்காலாகிய பந்துகள்; பந்து அசைந்து ஆட - பந்து ஆடித் தளர; பந்துக் கொண்டை - பந்து போன்ற கொண்டை; நந்தாத - கெடாத; நயனம் - கண்; குழை - குண்டலம்; அம்மனை யாட - அம்மனைக் காய்போன்று ஆட; கழங்கு ஆட - கழற்காய் போன்று ஆட; சுட்டி - ஓர் வகை ஆபரணம் (சூரியபிறை,

சந்திரபிறை என்னும் ஆபரணம். நெற்றியில் தொங்க விடப்படுவது) பணிகள் சதுரங்கம் விளையாட - ஆபரணங்கள் சதுரங்கம் போன்று ஆட்டமாட; சிலதியர் - தோழியர்; இப்பாட்டில் பந்து பல உறுப்புகளுக் குருவகப்படுத்தப் பட்டிருப்பதும், கழற்காயாடல், அம்மனையாடல், ஊஞ்சலாடல, சதுரங்கமாடல் முதலியன உவமிக்கப் பட்டிருப்பதும் காண்க. (2)

*பாடபேதம் : 1. பந்தசைந்தாடலரு 2. கொண்டை சென்றுடன் 3. நவமணி பதிந்த 4. கூட நற்பந்து.*

93. முத்திபெறு மூதண்ட கோளபா தளமளவு
[1]முதுசித்து விளையாடல்போல்
முட்டைதனில் வித்தினில் [2]நிலத்தினிற் பைதனில்
முளைத்தள விலாதபேதந்

தத்துவன வூர்வன தவிழ்ந்திடுவ நிற்பன
தனித்தனி பறப்பனவுமே
சத்தொடு நடப்பன கிடப்பன விருப்பன
தருக்கொடு முறுக்கிநெளியா

[3]வித்தக மிதத்திடுவ சொற்றிடுவ கத்துவன
வெத்தனை யிரைத்துமிரையா
விப்படி வகுத்தபல செப்புடலின் மாறாம
லென்றுமே மாறிமாறி

பத்திபெறு பல்லுயிர்ப் பந்தொளித் தாடுமுமை
பந்துவிளை யாடியருளே
பங்கயச் சிவகாம சுந்தரியென் னம்மையே
பந்துவிளை யாடியருளே. [3]

**குறிப்புரை :** கோளம் - உருண்டை; சித்து - ஓர்வகை மாயவித்தை; வித்து - விதை; பை - கருப்பை; முளைத்து -

தோன்றி; கிடப்பன - படுத்திடுவன; இருப்பன - உட்கார்ந்திருப்பன; தருக்கொடும் முறுக்கி நெளியா இத்தக மிதத்திடுவ - செருக்கொடும் விரைந்து நெளியும் இத்தகைய மிதந்திடு முயிர்கள்; எத்தனை இரைத்தும் இரையா இப்படி வகுத்த - ஒலிப்பவை எத்தனை சப்தமில்லாதன எத்தனை இப்படியாகப் பிரித்த; உயிர்ப்பந்து - உயிர்களாகிய பந்துகள்; செப்பு - திசைச் சொல். (3)

*பாடபேதம் : 1. முதுசிற்றில் 2. பைதனில் நிலத்தினில் 3.வித்தய, வித்தகை, வித்தையது அற்றிடுங்.*

**94. செங்கைச் சிவப்பினாற் பவளமணி நிறமெனத்**
**திருமேனி யொளிதவழவே**
**செம்பவள நிறமெலாம் பச்சைநிற மாகவே**
**திகழ்நீல வரிவிழியினா**

**லங்குநறு நீலநிற மாகித் திரும்பிமணி**
**யதரஞ் [1]சிவப்பேறவே**
**யதுகண்டு நகைபுரிய வெளிரிவண் டரளவடி**
**வாகியே படியிலடிபட்**

**டுங்கிநின் றோடியிரு குங்குமக் கொங்கையரு**
**கூடுபொன் னிறமூடியே**
**யொளிருமள கப்பந்தி யருகிலெறி யப்பந்து**
**முறுகறுப் புந்தியிடவே**

**பங்கயக் கடவுள்வெண் முத்தினாற் றைத்தபொற்**
**பந்துவிளை யாடியருளே**
**பங்கயச் சிவகாம சுந்தரியென் னம்மையே**
**பந்துவிளை யாடியருளே.** [4]

**குறிப்புரை** : அம்மை வீசும் முத்துப் பந்து கையிலிருக்கும்போது செம்மையான கையினது சிவப்பினால்

பவள மணியின் நிறமாகவும், மேலெழும்பும்போது உடலின் பச்சை நிறத்தினால் பவள நிறம் மாறி பச்சை நிறமாகவும், கரிய கண்களுக்கருகில் வரும்போது கருநிற முற்றும், திரும்பி வரும்போது உதட்டினிடம் வருங்கால் அதன் சிவப்புநிறம் ஏறவும், அங்ஙனம் நிறங்கள் மாறுவதைக் கண்டு சிரிக்க அச்சிரித்தலின் வெள்ளிய பற்களின் நிலவொளியினால் வெண்மையாகி பழைய வெண்மையான முத்தின் வடிவத்தைப் பெற்றுப், பூமியிலடிபட்டு உயர்ந்து ஓடி நின்று இரண்டு குங்குமக்குழம்பு பூசிய கொங்கையருகு சேர்ந்து பசலை நிறமான பொன்னிறம் பந்தில் மூடப்பெற்று, கூந்தலருகில் வீச அப்பந்தும் கருநிற முற்றுப் பொருந்த பந்து விளையாடுக எனப் பொருள் கொள்க. முத்துப்பந்து வெண்மை நிறமானதால் அந்தந்த உறுப்புக்களை யடையும்போது அதனதன் நிறங்களைக் கிரகித்துக் கொள்ளும் இயல்புடையது. அதரம் - உதடு; பங்கயக்கடவுள் - பிரமன்; உறு கறுப்பு உந்தியிட - மிக்க கருநிறம் மேற்கொண்டு முன்பு நிற்க. இப்பாட்டில் பந்தாடும்போது பந்து அம்மையின் உறுப்புக்களின் நிறங்களைக் கவர்தல் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழில் ''மருள்கான்ற நெஞ்சழக்கை'' என்ற பாடலையும்,

> ''......மையரி நெடுங்கணோக்கம் படுதலும்
> கருகிவந்து கைபுகிற் சிவந்துகாட்டும்
> கந்துகம் பலவுங் கண்டார்''. [மிதி - காட்சிப் பட 16]

என்ற கம்பராமாயணச் செய்யுளையும் நினைவூட்டுகிறது. (4)

*பாடபேதம் : 1. சிவப்பேறிநீ.*

95. பிடித்திடுங் கிள்ளையும் பிறழுமயி லன்னமும்
 பிள்ளைநா கணைவாய்ப்புளும்
 பெரிதுநடை நொடிபா வனைக்கினித் தண்டனை
 பிறக்குமென வேபறக்க

அடித்திடுங் கந்துகங் கண்டுசக் கரவாக
மஞ்சிப் பறந்தொளிக்க
லஞ்சன விழிக்குநிக ரானசஞ் சரிகமுட
னணிதிகழ்ச் சகோரம்வெருவ

பொடித்தெழுங் குங்குமக் கொங்கைக்கு நிகரென்று
புகல்கின்ற தென்னையென்று
பூந்தவள நகைசெய்து காந்தளங் கையினால்
[1]போர்கட் டடிப்பதென்ன

படித்தலந் தன்னிலெதிர் நின்றபாங் கியருடன்
பந்துவிளை யாடியருளே
பங்கயச் சிவகாம சுந்தரியென் னம்மையே
பந்துவிளை யாடியருளே. [5]

**குறிப்புரை :** கிள்ளை - கிளி; நாகணவாய்ப் புள் - மைனா; தண்டனை பிறக்கும் - தண்டனை கிடைக்கும்; கந்துகம் - பந்து; சக்கரவாகம் - சக்கரவாகப் பறவை; அஞ்சன விழிக்கு நிகரான சஞ்சரிகம் - மை பூசிய கரிய கண்களுக்கு ஒப்பான வண்டு; சகோரம் - சந்திரன் நிலவையுண்ணுமோர் பறவை; பொடித்து எழும் - விரைந்து மேலெழும்; பூந்தவள நகைசெய்து - அழகிய வெண்மை ஒளிதோன்றச் சிரித்து; காந்தளங்கை - காந்தள் மலர்போன்ற கை; போர் கட்டடிப்ப தென்ன - நெல் தாளை நெல்லுதிரக் கட்டி அடிப்பதைப் போன்று; படித்தலந்தன்னி லெதிர் நின்ற பாங்கியர் - பூமியில் எதிரே நின்ற தோழியருடன்; கொங்கைக்கு நிகர் பந்து ஆகவே அதையும் வென்று ஓட்ட ''போர் கட்டடிப்பதைப்போன்று அடி'' என்றார் மற்ற கிளி அன்னம் வண்டு முதலியன ஓடி விட்டதால். (5)

*பாடபேதம் : 1. போகட்டடிப்பதென்ன, போக்கட்டடிப்ப.*

**வேறு**

96. கொங்கை வெற்பென வேய சைந்து
குலுங்க முத்தெனவே
குங்கு மச்சிறு வேர்வை சிந்திட
நொந்து சிற்றிடையே

[1]தங்கு பொற்கொடி போனு டங்கிட
வங்கண் மைக்கயலே
தங்கு நற்குழை மேல்ம றிந்திட
வந்து பொற்பிடர்மேல்

கங்குல் மைக்குழ லேச ரிந்திட
மங்கை யர்க்கரசே
கந்த ரக்[2]குர லோசை யுமிகு
விங்கி தத்துடனே

பங்க யத்திரு வேலி ளங்கிடு
பந்த டித்தருளே
பங்க யச்சிவ காம சுந்தரி
பந்த டித்தருளே. [6]

**குறிப்புரை :** நுடங்கிட - அசைய; குழைமேல் - குழையுள்ள காதின் மேல், தனியாகுபெயர்; மை+அங்கண் கயல் - மை பூசிய அழகிய கண்களான கயல்கள்; மறிந்திட - நெருங்க; பிடர் - கழுத்தி னடிப்பாகம்; குழல் - கூந்தல்; கந்தரம் - கழுத்து; இங்கிதம் - இன்பம். (6)

*பாடபேதம் : 1. தங்குபேர் கொடி 2. குழலோசையிங்கித சங்கிதத்துடனே.*

97. கண்செ விக்குழை யாளர் கண்டொளிர்
கண்ப சப்புறவே
கண்க றுப்புற வாழ்கு டங்கை
கடுஞ்சி வப்புறவே

தண்சு டர்ச்சிறு பாட கங்கள்
சதங்கை யொத்திடவே
சண்ப கப்புது மாலை சிந்திட
வண்டொ லித்திடவே

யெண்சொ லிச்சொலி மாறி யங்கை
[1]யிரண்டு மொத்திடவே
யெஞ்சு சிற்றிடை [2]நூனு டங்க
விருந்து பொற்புடனே

பண்சொ லிச்சிறு தாள மொத்திடு
பந்த டித்தருளே
பங்க யச்சிவ காம சுந்தரி
பந்த டித்தருளே. [7]

**குறிப்புரை:** கண் செவிக் குழையாளர் கண்டு ஒளிர் கண் பசப்புற - மூன்று கண்களையும் செவியில் குண்டலத்தையு முடைய சிவபெருமான் கண்டு ஒளிர்கின்ற கண் துன்பத்தால் வருந்த; ஆழ் குடங்கை - ஆழ்ந்த உள்ளங்கை; பாடகம் - சிலம்பு; ஒத்திட - தாளம் போட; சிற்றிடை நூல் நுடங்க - சிறிய இடை நூல் போன்று அசைய; எண் சொலிச் சொலி - எண்மடங்கு மிக்குச் சொலிக்கும்; சொலிச் சொலி - இரட்டைக் கிளவி; பொற்புடன் - அழகுடன்; பண்சொலிச் சிறு தாளம் - இசை ஒலிக்கும் சிறிய தாளம்; தாளத்தையொத்த பந்து என்க; எண் சொலிச் சொலி யங்கை என்றும் அங்கை மாறி இரண்டும் ஒத்திட எனவும் பிரித்துக் கூட்டுக. (7)

*பாடபேதம்: 1. யிரண்டு முற்றிடவே 2. நூனுடங்கியிருந்துமொத்திட பந்தடித்.*

98. பஞ்ச கிர்த்திய மேயு கந்தவர்
பங்கி னிற்பவளே
பஞ்ச வர்க்கொரு தூது சென்றவர்
தங்கை நற்பரையே

பஞ்ச வத்திர சோதி யந்தரி
மந்தி ரப்பொருளே
பஞ்ச லட்சண காவி யம்புக
லஞ்ச னக்குயிலே

[1]பஞ்சர க்கிளி பாணி கொஞ்சிய
வஞ்சி நற்கொடியே
பஞ்சு ரத்தெழு கீதம் விஞ்சுவி
பஞ்சி வித்தகியே

[2]பஞ்சி யொத்திடு பாத சிந்துரி
பந்த டித்தருளே
பங்க யச்சிவ காம சுந்தரி
பந்த டித்தருளே. [8]

**குறிப்புரை:** பஞ்சகிர்த்தியம் - ஐந்து தொழில்கள்; தூது சென்றவா - திருமால் (கண்ணவதாரத்தில்); பஞ்ச லட்சணம் காவியம் - ஐந்து வித இலக்கணம் அமைந்த இலக்கிய நூல் (எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பன); அஞ்சனம் - கருமை; பாணி கொஞ்சிய பஞ்சரக்கிளி - கையினின்று கொஞ்சிய கூட்டுக்கிளி; பஞ்சுரம் - பாலை நிலத்து இராகம்; விபஞ்சி - வீணை; விபஞ்சியை யுடைய வித்தகி என்க. பஞ்சி யொத்திடுபாத சிந்துரி - பஞ்சைப் போன்ற மென்மையான சிவந்த பாதமுள்ள உமையே; சிந்துரி - சிவப்பு நிறமுடையவள். (8)

*பாடபேதம் : 1. பஞ்சுரக்கிளி 2. பஞ்சையொத்திடு.*

99. பந்த னைப்பிணி தீர வந்தவள்
பந்த டித்தருளே
பைந்த மிழ்ப்புலி யூரு றைந்தவள்
பந்த டித்தருளே

[1]பந்தி னைத்தன பார மந்திரி
பந்த டித்தருளே
பைந்த ளிர்த்திரு மேனி யம்பிகை
பந்த டித்தருளே

பந்த மற்றப வானி[2]யம்பிகை
பந்த டித்தருளே
பந்த ரிட்டுல கேழு நின்றவள்
பந்த டித்தருளே

[3]பைந்த ருக்கிணை [4]யானசங்கரி
பந்த டித்தருளே
பைந்தொ டிச்சிவ காம சுந்தரி
பந்த டித்தருளே. [9]

**குறிப்புரை :** பந்தனைப் பிணி - கட்டாகிய நோய்; பந்தினைத் தனபாரம் அந்தரி - பந்தினைப்போன்ற தனபாரமுடைய அந்தரியே; பந்த மற்ற பவானி - தொடர்பு நீங்கின பவானியே; பவனது மனைவியாதலால் பவானியாயினள்; பந்தர் இட்டு உலகு ஏழும் நின்றவள் என்று பிரிக்க; பைந்தருக்கு இணையான - பசுமையான கற்பகத் தருவுக்குச் சமமாகக் கொடுக்கும், மற்றும் பைந்தரு என்பது பச்சை நிறமுடைய திருமாலைக் குறிப்பின் அவருக்கு இளையான (தங்கையான) சங்கரி என பிரதிபாடத்திற்குப் பொருள் கொள்க. (9)

*பாடபேதம் : 1. பந்தினைத்தின 2. யந்தரி 3. பைந்தருக்கிளை 4.யானசுந்தரி.*

100. பைம்பொன் முத்தணி சோதி [1]தந்திடு
பந்த டித்தருளே
பஞ்ச ரத்தின மேபு னைந்திடு
பந்த டித்தருளே

பண்பு வைத்திம வான்வ ழங்கிடு
பந்த டித்தருளே
[2]பங்கி னிற்சுப மேபி றந்திடு
பந்த டித்தருளே

பண்டு நற்பசு பாசம் வந்திடு
பந்த டித்தருளே
[3]பஞ்ச கிர்த்திய மேவி ளைந்திடு
பந்த டித்தருளே

பஞ்ச சத்திநல் வாம தந்திரி
பந்த டித்தருளே
பைந்தொ டிச்சிவ காம சுந்தரி
பந்த டித்தருளே. [10]

குறிப்புரை : இமவான் - இமயமலை யரசன்; சுபம் - நன்மை; வாம தந்திரி - இடப்பாகத்தின் அலங்காரத்தை யுடையவளே. (10)

*பாடபேதம் : 1. திமிர்ந்திடு பந்தடித் 2. பங்கினிற் சுயமே 3. பஞ்ச சத்தினி.*



---

சீர்பூத்த செல்வத் திருத்தில்லை மன்றகம்என்
கார்பூத்த நெஞ்சகமாக் கைக்கொண்டாள் ஏர்பூத்துள்
ஐயம் ஒருங்கீன்ற அந்நுண் மருங்கொசிய
வையம் ஒருங்கீன்ற மான்.

- *தில்லைச் சிவகாமி அம்மை இரட்டைமணி மாலை* [ 1 ] குமரகுருபரர்

## 11. பொன்னூசற்பருவம்

101. பின்னூச லாடமுகி லளகாட விக்கருகு
[1]பிறைமகர குண்டலங்கள்
பெரியவள் ளைச்செவியி [2]லிருபருதி போலப்
பிறங்குசிற் றூசலாட

மன்னூச லாடமுத் தாரவட மிருகொங்கை
[3]மதிமீதி லுடுவென்னவே
வட்டமிடு பச்சைவி லிரட்டைவரி வில்லென்ன
வாகுவலை யங்களாட

வென்னூச லாடும்வினை தன்னூச லாடாம
லிருபாத கமலத்திலு
மினியதம னியமிழைத் தணியுநூ புரமாட
வெழின்[4]மனோ வொடுகலாபம்

பொன்னூச லாட[5] விரு மின்னூச லாடவே
பொன்னூச லாடியருளே
பொன்னம் பலச் செல்வி சிவகாம வல்லியே
பொன்னூச லாடியருளே. [1]

**குறிப்புரை:** இக்கருகும் முகில் அளகு - இந்தக் கரிய மேகமொத்த கூந்தல்; பிறை மகர குண்டலங்கள் - பிறைபோன்றதும் சுறா மீன் போன்றதுமான குண்டலம்; வள்ளைச்செவி - வள்ளைப் பூப்போன்ற காது; இரு பருதி - இரு சூரியன்; மன் ஊசல் - நிலைத்த ஊசல்; மதி முத்தாரத்திற்கும் உடு (நட்சத்திரம்) கொங்கைகளுக்கும் உவமையாக்கப்பட்டது காண்க. என் ஊசல் ஆடும் வினை தன் ஊசல் ஆடாமல் - என்னுள் ஊஞ்சலாடும் இருவினைகளும் தன் இஷ்டப்படி சுற்றாது; இனிய தமனியம் இழைத்து அணியும் நூபுரம் ஆட - இனிய பொன்னால் இழைக்கப்பட்டு அணியும்

சிலம்பு ஆட; கலாபம் - பதினாறு கோவையுள்ள மணி; இரு மின்னூசலாட - இரண்டு பெண்கள் (திருமகள் கலைமகள்) ஊஞ்சலை ஆட்ட. (1)

*பாடபேதம் : 1. பிறழ்மகர 2. மதிபருதிபோல 3. மலைமீதி, 4. மினாவொடு 5. இடை.*

102. செறியுமல ரிடைவண்டு தேனுண்டு மீண்டுந்
திரும்பித்தி ரும்பிவரல்போற்
றீவினையு நல்வினையும் வந்துவந் தேபோய்த்
திரும்பித்தி ரும்பிவரல்போ

லறிவுமைம் பொறிதோறும் வீடாமல் [1]விடையம்
அடுத்தடுத் தோடிவரல்போ
லங்கோடு மிங்கோடும் வந்தோடு முயிர்கள்போ
லலகிலிடை பிங்கலைகள்போ

லெறிசுடர் விளங்கு[2]விண் மணிபலகை யாகவுல
கிடையான வடமேருவு
மிரசதக் கிரியுநடு தூணாக [3]வண்டமுக
டேறுமுத் திரமாகவே

பொறியர வினுக்கரசு மாணிக்க வடமான
பொன்னூச லாடியருளே
பொன்னம் பலச் செல்வி சிவகாம வல்லியே
பொன்னூச லாடியருளே. [2]

**குறிப்புரை** : விடாமல் விடயம் அடுத்தடுத்து ஓடி வரல்போல் - அழியாமல் விஷயங்கள் அடுத்தடுத்து வருவது போன்று; அலகில் - அளவில்லாத; எறிசுடர் விளங்கு விண் மணி பலகையாக - வீசுந் தண்சுடர், வெண்சுடர் விளங்கும் ஆகாயம் அழகிய பலகையாகவும்; இரசதக்கிரி - வெள்ளி மலை; அண்ட முகடு ஏறும் உத்திரமாக என்று பிரிக்க; பொறி

யரவினுக்கு அரசு - படப்பொறி யுடைய பாம்புகளுக்கு அரசனான ஆதிசேடன். இப்பாடலில் ''அங்கோடு மிங்கோடும் வந்தோடும் உயிர்கள் போல்'' என்ற அடியின் கருத்து,

''பூசலினெழுந்த வண்டு மருங்கினுக் கிரங்கிப்
பொங்க மாசுறு பிறவிபோல வருவது போவதாகிக்.....''
[மிதிலைக்கா. 10]

என்ற கம்ப ராமாயணப்பாடலினும் உள்ளது. (2)

*பாடபேதம் : 1. விடையத்தருத்தருத் 2. வெண்மணி 3. அண்டங்களேறுமுத்.*

103. இரவுபகல் மதிபருதி பெரிதூச லாடவுயி
ரெழுவகைப் பிறவிதோறு
மினியசிற் றூசலா டப்பஞ்ச பூதங்க
ளெங்கு[1]நின் றூசலாட

நரகொடு [2]சுவர்க்கத்தி லுறுபோக புவனத்தில்
நாடுமுயி ரூசலாட
நல்வினைக டீவினைக டுன்பமுட னின்பங்கள்
நாடோறு மூசலாட

விரவுமும் மூர்த்திகளு முத்தொழிலு மெக்காலும்
வீடாம லூசலாட
[3]வீடுதரு மணிமன்று நாடகங் கண்டவர்
விமானங்க ளூசலாட

பொருவில்[4]மண வீசன்முக் கணனூச லாடவே
பொன்னூச லாடியருளே
பொன்னம் பலச் செல்வி சிவகாம வல்லியே
பொன்னூச லாடியருளே. [3]

**குறிப்புரை :** மதிபருதி - சந்திரனும் சூரியனும், உம்மைத்தொகை; நல்வினைகள் தீவினைகள் துன்பமுடன் இன்பங்கள் நாள்தோறும் ஊசலாட என்று பிரிக்க; வீடுதரும் - மோட்சம் தரும்; பொருவில் மண ஈசன் - ஒப்பற்ற மகிழ்ச்சியையுடைய தலைவன். (3)

*பாடபேதம் : 1. நின்றூசலாடி 2. துறக்கத்தி 3. வீடுதகு, வீடுதொறு 4. மனமீசன் முக்கண்ணியிவள் விளையாட.*

104\. மின்சொரி பசும்பொன் [1]விமானம்வரு மாமகளிர்
விறலிய ரெனக்குழுமியே
விளரியா ழிசைமூரல் மருவுசில் லரிமுழவு
விஞ்சைமெல் லியரிரட்டக்

கொன்சொரியும் வேல்விழிப் [2]பஞ்சினடி வஞ்சியிடை
கொஞ்சுகிளி யஞ்சொன்மடவார்
குமரிமயி லெனவருகு கவரிபணி [3]மாறவே
கோடிசிவ சத்தியருடன்

தென்சொரி பசும்பாகு விளைகிளவி மங்களஞ்
சிலதியர்கள் பலகூறவே
சிற்றால வட்டம்விசி றிப்பாரி சாதமலர்
சிவிறிபன் னீர்தூவவே

பொன்சொரி பசும்பாவை புதியபொற் பூவையே
பொன்னூச லாடியருளே
பொன்னம் பலச்செல்வி சிவகாம வல்லியே
பொன்னூச லாடியருளே. [4]

**குறிப்புரை :** விறலியர் எனக் குழுமி - பாண்மகளைப் போன்று கூடி; விளரியாழ் - ஓர் வகையாழ்; இசைமூரல் மருவு விஞ்சை மெல்லியர் எனக் கூட்டுக; இசையும், அழகிய பற்களும் பொருந்திய வித்தையைக் கற்ற பெண்கள்; சில் அரி

முழவு - இனிய அழகிய குடமுழா; இரட்ட - அசைக்க; கொன்சொரியும் வேல்விழி - அச்சமிகும் வேல்போன்ற கண்; குமரி மயிலென அருகு கவரிபணி மாற - இளையமயிலைப் போன்று அருகாக சாமரைகளை மாறி மாறி வீச; தென் சொரி பசும்பாகு விளை கிளவி - அழகு மிகும் இளைய வெல்லப்பாகு போன்ற இனிமை விளையும் சொல்; சிலதியர் - தோழியர்; சிவிறி - நீர்வீசுந் துருத்தி. (4)

*பாடபேதம் : 1. விமானத்திலேறிவரு விறலி 2. பஞ்சியடி 3. மாறவெருகோடி.*

105. அன்னையே தாயேயென் மாதா பிதாவேயென்
னாவியே பூவில்வாழு
மன்னமே யென்னமே யின்னமே கன்மத்தி
லலையாம லெனைவைத்திடும்

மன்னுநீ பின்னுநீ முன்னுநீ யல்லாமல்
மற்றுமொரு தெய்வமுளதோ
[1]மற்றொப்பி லார்பஞ்ச கர்த்தாவை யும்பெற்ற
மாதாவு நீதானெனிற்

கன்னியே குமரியே [2]கன்னிகா ரத்திற்
[3]களித்தவிரு கொங்கைமயிலே
கன்னலே மின்னலே யின்னலே தீரவரு
கருணா கரக்கவுரியே

பொன்னிசூழ் புலிசைவாழ் பொன்னிறப் பூவையே
பொன்னூச லாடியருளே
பொன்னம் பலச்செல்வி சிவகாம வல்லியே
பொன்னூச லாடியருளே. [5]

**குறிப்புரை :** ஆவி - உயிர்; என்னமே - என் அம்மே என்பதன் தொகுத்தல்; இன்னம் - இன்னமும்; மன்னும் நீ -

தங்கும் நீ; கன்னிகாரத்தில் - கோங்கு மலரைக் காட்டிலும், முதலாகுபெயர்; கோங்கின் பூவரும்பைத் தனங்களுக்கு உவமை கூறுவராதலால் கன்னிகாரத்தில் களித்த விரு கொங்கை என்றார். பொன்னி - காவிரியாறு. (5)

*பாடபேதம் : 1. மற்றோதில் யார் 2. கன்னிகாரத்தலிற் 3.கலித்தலிரு.*

**வேறு**

106. நாறு பூமலர் விடாது நந்தவன
வாடை வீச வொருபால்
[1]நாளி கேரவிள நீர்கள் சிந்தமுது
வாளை பாயவொருபால்

வீறு சோலைதொறும் [2]வீழுமென் கனியின்
வேரி பாய வொருபால்
மேவு சேறுழுது நாறு கொண்டுநடும்
வேலை வேலிவொருபா

[3]லாறு போல்கழையி னீர்கள் பொங்க[4]வதி
னாலை பாயவொருபா
லால வாலநிறை சாலி [5]பொன்சொரியு
மாறு பாயவொருபா

லூறு கேணிபுடை சூழ்சிதம் பரிபொன்
னூச லாடியருளே
யோதும் வேதசிவ காமசுந் தரிபொன்
னூச லாடியருளே. [6]

**குறிப்புரை :** நாறுபூ - வாசனை வீசும் பூ; நாளிகேரம் - தென்னை; இளநீர்கள் நீரில் சிந்த அதைக்கண்டு இரையென வாளை மீன்கள் பாய; சிந்த முதுவாளை எனப்பிரிக்க; வீறுசோலை - பெருமை பொருந்திய சோலை; வேரி - தேன்;

வீழுமென்கனி - வீழ்கின்ற மெல்லிய பழம்; நாறு - நெல்நாற்று; வேலைவேலி - கடல் சூழ்ந்து வேலியாகவுடைய நிலம்; கழை - கரும்பு; ஆலவாலம் நிறைசாலி - வயல்களில் நிறைந்த சாலிப்பயிர்கள்; ஊறுகேணி - சுரக்கின்றகுளம்; ஆலை - கருப்பஞ்சாறு. (6)

*பாடபேதம் : 1. நாரிகேரவிளநீர் 2. வீழுநன்கனிகள் 3. ஆறுபோல் விளைசாறு பொங்கி 4. மதியாலைபாய, மிதுவாலை பாய 5. பொன் சொரியவாறு.*

107\. ஊழி யூழிதொறும் வாழ்சுமங் கலிபொன்
னூச லாடியருளே
யூர்வி மானம்வரு வாம தந்திரிபொன்
னூச லாடியருளே

யோவில் மோனசிவ யோகர்நெஞ் சகிபொன்
னூச லாடியருளே
யூறுதே [1]னொழுகு வாசமஞ் சரிபொன்
னூச லாடியருளே

யோடி யோடியொழி யாதுவந் திடுபொன்
னூச லாடியருளே
யோடை சூழ்புலிசை வாழுமம் பிகைபொன்
னூச லாடியருளே

யோதொ ணாதபர லோகசங் கரிபொன்
னூச லாடியருளே
யோதும் வேதசிவ காமசுந் தரிபொன்
னூச லாடியருளே. [7]

**குறிப்புரை:** ஊர் விமானம் - ஊர்கின்ற விமானம்; ஓவில் - நீங்காத; மஞ்சரி - மாலையை யொத்தவளே; ஓதொணாத - சொல்ல முடியாத; ஊழிதொறும் - யுக முடிவுதோறும். (7)

*பாடபேதம் : 1. ஒழுகு வாசமஞ்சரி.*

108. காசு லாவிய கலாப [1]கஞ்சுளிபொன்
ஞூச லாடியருளே
காரி மாரிகவு மாரி சுந்தரிபொன்
ஞூச லாடியருளே

வாச மேவுபுலி யூரில் வந்தவள்பொன்
ஞூச லாடியருளே
மாசி லாதமணி யானவங் கணைபொன்
ஞூச லாடியருளே

பாச மானதுவி மோசனந் தருபொன்
ஞூச லாடியருளே
பாரி சாதமணம்வீசுகொந் தளிபொன்
ஞூச லாடியருளே

ஊச லாடும்வினை தீரவந் தவள்பொன்
ஞூச லாடியருளே
யோதும் வேதசிவ காமசுந் தரிபொன்
ஞூச லாடியருளே. [8]

**குறிப்புரை :** காசு + உலாவிய கலாப கஞ்சுளி - ஆடைகள் நிரம்பிய பதினாறு கோவையுள்ள மணியையுடைய சட்டையை யுடையவளே; பாசமானது விமோசனந்தரு எனப் பிரிக்க; கொந்தளி - மயிரையுடையவளே; ஊசலாடும் வினை - மாறி மாறி உடலில் ஊசலாடும் தீவினை; மாசு இலாத மணியான அம்கணை - குற்றமற்ற மணியான அழகிய கண்களை யுடையவளே. (8)

*பாடபேதம் : 1. கஞ்சுகி என இருக்கலாம்.*

109. ஆதி[1]போதனிய னாகியஞ் சனிபொன்
னூச லாடியருளே
[2]ஆர பார்வதி காரசங் கரிபொன்
னூச லாடியருளே

நீதி நூனெறி வழாதசைந் திடுபொன்
னூச லாடியருளே
நீல லோசனவி சாலவஞ் சினிபொன்
னூச லாடியருளே

நாத கீதநவ கீத ரஞ்சகிபொன்
னூச லாடியருளே
ஞான தேசகி பிநாகநெஞ் சகிபொன்
னூச லாடியருளே

[3]யோதை நாதன்மகி ழாயியம் பிகைபொன்
னூச லாடியருளே
யோதும் வேதசிவ காமசுந் தரிபொன்
னூச லாடியருளே [9]

**குறிப்புரை :** ஆதிபோதனி அனாதி அஞ்சனி - முதற்காரணமான அறிவுடையவளும், அனாதியானவளும், கருமையானவளுமா யுள்ளவளே; நீதிநூல் நெறி வழாது அசைந்திடு பொன் - எனப் பிரிக்க; வழாது - தவறாது; நீலலோசன விசால வஞ்சனி - கரிய பரந்த கண்களையுடைய பெண்ணே; ரஞ்சகி - இன்பமுடையவளே; ஞான தேசகி - ஞானத்தலைவி; பினாக நெஞ்சகி - திரிசூலங்கொண்டு தைரியமாயுள்ளவளே; ஓதை நாதன் - சிவபெருமான்; ஆயி - காளியின் பெயர். வஞ்சனி - பெண்; வஞ்சினி என்பது வஞ்சனி என்றிருக்கவேண்டும். (9)

*பாடபேதம் : 1. போதனியனாதி 2. ஆரவாரவரு கார சங்கரி, ஆரவார வதிகார, 3. பூத நாதன், யூதன் நாதன்.*

110. காது லாவுகுழை [1]தோளிவர்ந் தொளிர்பொன்
[2]னூச லாடவிருள்சேர்
கார பாரகுழல் சூழும்வண் டுகள்பொன்
னூச லாடமுலைமார்

மீது லாவுமது மாலைமஞ் சரிபொன்
னூச லாடவிருபால்
வீசு சாமரைகள் மூசும் வெண்டிரையி
னூச லாடவொளிசேர்

பாத தாமரையி னூபுரங் களொலி
யூச லாடமிகவே
பாவியே னுனது பாத நம்பிமன
மூச லாடமுதுநீ

ரோதை சேர்புலிசை [3]வாழுமம் பிகைபொன்
னூச லாடியருளே
யோதும் வேதசிவ காமசுந் தரிபொன்
னூச லாடியருளே. [10]

**குறிப்புரை :** தோள் இவர்ந்து ஒளிர் - தோள்மீதெழும்பி பிரகாசிக்கின்ற; காரபாரகுழல் - கரியபாரம் பொருந்திய கூந்தல்; மார் - மார்பு; மதுமாலை - தேன் பொருந்திய மாலை; சாமரைகள் மூசும் வெண்டிரையின் - சாமரைகள் மொய்க்கும் வெண்மையான அலையைப்போல; பாததாமரை - உருவகம்; பாவியேன் - பாபம் செய்தவனாகிய நான்; முதுநீர் ஓதைசேர் புலிசை - நீரொலி சேர்ந்த சிதம்பரம். (10)

*பாடபேதம் : 1. தோளில் வந்தொளிர் 2. ஊசலாடி யிருள்சேர் 3. வாழவந்தவள் பொன்.*



## 12. நீராடற் பருவம்

111. அடியிணைகள் புடவிதிக ழண்டமுக டதுமகுட
மட்டதிக் கும்புயங்க
ளலைகட லுடுத்ததுகில் [1]புடைபெருகு மிருகண்க
ளரியசூ ரியசந்திரர்

வடகயிலை மகமேரு விருகொங்கை தாரகண
மார்பணியு முத்துமாலை
வாடையொடு கோடையும் நாசியிடை பிங்கலைகள்
வடிவெலாம் நின்வடிவமே

[2]யிடையிலணி முழுகிவிளை யாடுதட முண்டென்
றெவர்க்குமே புகலவரிதா
மென்றாலு மண்டங்க ளெல்லா மிதக்கவே
யினியநட னம்புரிந்து

புடைபெயரு மானந்த வெள்ளத்தி லாடுமுமை
புதியநீ ராடியருளே
புனிதசிவ காமசுந் தரியமிர்த வாரியே
புதியநீ ராடியருளே. [1]

**குறிப்புரை :** அடியிணைகள் புடவி - இருபாதங்கள் பூமி; திகழ் அண்ட முகடது மகுடம் - விளங்கும் ஆகாய உச்சியே கிரீடம் ; அட்டத்திக்கும் புயங்கள் - எட்டுத் திக்கும் புயங்கள்; தாரகணம் - நட்சத்திரக்கூட்டம்; வாடைக் காற்றும், மேலைக் காற்றும் முறையே மூக்கின் சுவாசமான இடைகலை, பிங்கலைகள்; இடையில் அணிமுழுகி விளையாடு தடம் - இடுப்பில் அணியும் ஆபரணம் முழுதும் பரவியுள்ள நிதம்பம். (1)

*பாடபேதம் : 1. புடைபெயரும் 2. இடையினி.*

112. கண்கள்கய லென்னக் கணைக்கால் வராலெனக்
கைவிரல்கள் களிறென்னவே
கமழ்முழந் [1]தாளிணைக ளுக்குஞெண் டென்னவே
கமலவடி கமடமெனவே

வண்களமும் வெண்[2]சங்க மென்னவே வீசவே
வளராசை வலைவீசவே
மைவிரவு சுருளோதி சைவலம தென்னவே
வார்காது வள்ளையெனவே

பெண்கள்மன மருளவிரு கொங்கைமுக நகைமுகம்
பெரியதா மரையென்னவே
பிரசவிதழ் குமுதமென வுரைசெய்தும் பிகளொடு
பெடைவண்டு [3]புடைசுழலவே

புண்கொள்நெடு வேலனைய கண்கள்[4]களி கொள்ளவரு
புதியநீ ராடியருளே
புனிதசிவ காமசுந் தரியமிர்த வாரியே
புதியநீ ராடியருளே. [2]

**குறிப்புரை:** கணைக்கால் வராலென - கணைக்கால் வரால் மீன்போன்று; கைவிரல்கள் களிறென்னவே - கைவிரல்கள் ஆண் சுறாமீன் போன்றும்; கமலவடி கமடமெனவே - தாமரையொத்த பாதம் ஆமையைப் போன்றும்; முழந்தாளிணைகளுக்கு ஞெண்டென்ன - முழங்கால்களுக்கு உவமை நண்டு என்று சொல்லவும்; வண்களமும் வெண்சங்கம் என்ன - வளவிய கழுத்து வெண்மையான சங்கு என்று கூறவும் வீசவே வளராசை வலை வீச - வீசுவதற்காக மிக்கு வளர்கின்ற ஆசையாகிய வலையை வீச, மைவிரவு சுருளோதி சைவலமது என்ன - கருமை விரவு சுருண்ட தலைமயிர் பாசியோ என்று கூறவும்; வள்ளை - வள்ளைப்பூ; பெண்கள் மனம் மருள இருகொங்கை முகம் நகைமுகம் பெரிய தாமரையென்ன -

பெண்களின் மனமும் காம மயக்க மடையும்படியான இரண்டு முலைக்காம்புகளும், சிரித்த முகமும் பெரிய தாமரை மலரைப்போன்று இருக்க; பிரசவிதழ் குமுதமென - இனிய அமுதம் கொடுக்கும் உதடு குமுத மலர்போன்றும்; தும்பி - வண்டு; புடைசுழல - பக்கத்தில் சுற்ற; புண்கொள் நெடுவேல் - மாற்றார் மாமிசம் கொண்ட நீண்டவேல்; இப்பாட்டில் நீராடற் பருவத்திற்கேற்ப பல உறுப்புக்கட்கும் நீர்வாழ்வனவற்றையே உவமை கூறின திறம் வியக்கத்தக்கது. இப்பாட்டும், திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழில் 'செங்கய லொடுங்கண்கள்'' என்ற பாட்டும், பாகம்பிரியாவம்மை பிள்ளைத்தமிழில் ''துள்ளும் பொருங்கய லிரண்டருகினும்'' என்ற பாட்டும்,

*''பங்கயக் குவளை யாம்பல் படர்கொடி வள்ளை நீலஞ்*
*செங்கிடை தரங்கங் கெண்டை சினைவரா லினைய*
*தேம்பத்*
*தங்கள்வே றுவமை யில்லா வலியவந் தழுவிச் சாலு*
*மங்கையர் விரும்பி யாடும் வாவிகள் பலவுங் கண்டார்.''*

(மிதிலைக்கா.17) என்ற கம்பராமாயணப் பாட்டினை யொத்தல் காண்க.(2)

*பாடபேதம் : 1. தாளிணை களிக்கு 2. சங்குமென வீசு வீசனும் 3. புடை சூழவே 4. களி கூரவே புதிய.*

113. பாராட வேதண்ட வேராட மூதண்ட
பகிரண்ட கூடமாடப்
பாதாள மாடவெகு வேதாள மாடமிகு
பலசீவ கோடியாடத்

தாராட [1]வாழ்வுதலை மாலையா டச்சூடு
தவளவெண் பிறையாடவே
தமனியப் பொதுவினின் றாடுநின் கணவனார்
தலைமீது நின்றாடுவாள்

சீராடி [2]விளையாட வலளுடன் கூடித்
திளைப்பலே துளையமாடிச்
சித்தங் [3]களித்துமுத் தாடயள காடவித்
திரும்பிக் குடைந்தாடியே

[4]போராடு கங்கையுட னுறலாடல் போலவே
புதியநீ ராடியருளே
புனிதசிவ காமசுந் தரியமிர்த வாரியே
புதியநீ ராடியருளே. [3]

**குறிப்புரை :** பார் - பூமி; வேதண்டவேர் - மலையினடிப் பாகம்; மூதண்ட பகிரண்டகூடம் - பழைய உலகமும் அண்டத்தின் வெளியும்; வேதாளம் - பூதவகைகளிலொன்று; தாராட - மார்பின் மாலையாட; சூடு தவள வெண் பிறை - உச்சியிலுள்ள மிக்க வெள்ளிய பிறைச்சந்திரன்; நின் கணவனார் தலைமீது நின்றாடுவாள் - சிவபெருமான் தலைமீதுள்ள கங்கை தேவி; திளைப்பவே துளையமாடி - நெருங்கி மகிழ்ந்து அனுபவித்து ஆடி; முத்தாட- முத்தமிட; அளக + அடவி - கூந்தலாகிய காடு; குடைந்தாடி - நீரில் மூழ்கியாடி; போராடு - சண்டையிடும். (3)

*பாடபேதம் : 1. வாவுதலை மாலை 2. விளையாடி யவளுடன் 3.களிக்க முத்தாட 4. போராடி கங்கையுட.*

114. பாகீ ரதன்றந்த கங்கைப் பிர வாகம்
பரந்துவரு கின்றநாளிற்
பவளவார் [1]சடையொடும் பிறைத்தோணி விட்டுநம்
[2]பரமன்விளை யாடலெனவே

யேகாந்த மாகியசு காந்தயோ கந்தனி
லிருந்துசிவ பூசை புரியு
மேகாம் பரந்தனிற் காமாட்சி யம்மையு
மேகம்ப நதியாடல்போ

லாகாய கங்கைசர சுவதியமுனை காளிந்தி
யதலபா தாளகங்கை
யண்டபகி ரண்டங்க ளனுவென மிதந்திடு
மனாதிநதி யதுவுமுனிபாற்

போகாத காவேரி யும்பெருகி வருகின்ற
புதியநீ ராடியருளே
புனிதசிவ காமசுந் தரியமிர்த வாரியே
புதியநீ ராடியருளே. [4]

**குறிப்புரை :** பாகீரதன் - சூரிய வம்சத்தரசன்; சகரன் வழி வந்தவன்; சகரர் மக்கள் கபில முனிவர் சாபத்தால் சாம்பராக அவ்வஸ்திகளின் மீது கங்கை நீர் பாயச் செய்து அவர்கட்குச் சுவர்க்கம் அளித்தவன். வார் சடை - நீண்ட சடை; பிறைத்தோணி - பிறையாகிய படகு; ஏகாந்தம் - தனி; காஞ்சியில் காமாட்சியம்மை தவஞ் செய்ததால் ஏகாந்தமாகிய...... புரியும் என்று கூறினர். ஏகாம்பரம் - காஞ்சியின் ஒருபாகம்; காமாட்சியம்மையுமே கம்ப நதியாடல்போல் - காமாட்சியம்மையுமே கம்பாநதியில் ஆடுவதுபோல; சிவபெருமான் காமாட்சியம்மையின் தவத்தை யழிக்கக் கம்பாநதியைப் பெருக்கெடுக்கச் செய்தார். ஆகாய கங்கை, சரசுவதி, யமுனை, காளிந்தி, பாதாள கங்கை போன்ற காவேரி நதி யென்க. அனாதி நதி யதுவும் முனிபாற் போகாத - வேறு முதலின்மையாகிய நதியாகவும், தன்னை வைத்திருந்த முனிவனான அகத்தியனிடம் செல்லாத. (4)

*பாடபேதம் : 1. சடையார் பிறைத் தொண்டு 2. பரமர் விளையாட.*

115. நறுமலர்ப் பூங்கா வனந்தனி லெழுந்தருளி
நாண்மலர்க டளிர்கள்கொய்தும்
நாடகக் கணிகைநிகர் கோலக் கலாபமயில்
நடனங்க ளினிதுகண்டுங்

குறுநடைக் குமரிமட வன்னமொடு [1]கூடியே
குலவிமெல் லென நடந்துங்
குயில்களொடு கூவியுங் கிளிகளொடு பேசியுங்
குயில்சிறுங் குறும்பிழைத்துஞ்

சிறு[2]பொதும் பரினின் றொடித்துவிளை யாடியுஞ்
சேடிய ருடன்கூடியுஞ்
சிறுதும்பி யம்மனை கழங்குதெள் ளேணமொடு
சிவிறிநீர் விளையாடியும்

பொறிவரிப் பாவை[3] பொற் குரவைவிளை யாடியும்
புதியநீ ராடியருளே
புனிதசில காமசுந் தரியமுத வாரியே
புதியநீ ராடியருளே. [5]

**குறிப்புரை** : நாள்மலர்கள் தளிர்கள் கொய்து எனப் பிரிக்க. நாள்மலர் - அன்றலர்ந்த மலர்; கணிகை - தாசி; குயில்சிறுங்குறும் பிழைத்தும் - சிறு வீடு முதலிய கட்டும் சிறிய குறும்புச் செயல்களைச் செய்தும்; பொதும்பர் - சோலை; கிளை முதலியன ஒடித்து விளையாடல்; சிறுதும்பி - குறுகிய நேர விளையாட்டான தும்பியாட்டம், இதைத் தெருவில் பெண்கள் 'தும்பி துவாட்டி எம்பேரு வெள்ளாட்டி' என்று சொல்லி கை முறுக்கிக் கோத்துச் சுற்றுவதைக் காண்க. தெள்ளேணம் - மகளிர் விளையாட்டி னொன்று; பொறி வரிப்பாவை பொற் குரவையாடி - புள்ளிகளையுடைய கோடுகளையுடைய பொம்மையுடன் அழகிய குரவை விளையாடியும். இப்பாட்டில் குயில் சிறுங் குறும்பிழைத்தல் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் 'கந்தங்கமழு நறுங்களபக்.....' என்ற பாட்டினாலுணரலாம். சீவக சிந்தாமணி 79-ஆம் பாடல் நச்சர் உரையாலும் அறியலாம். சிறுபொதும்பரினின் றொடித்து விளையாடியும் என்பது பிரதிபாடப்படி ''ஒளித்து விளையாடியும்'' என்றிருப்பின்

"....காணெனை யென்னாத் தன்னேரில்லா ளங்கொரு கொய்பூந் தழைமுழ்கி யின்னேயென்னைக் காணுதி..." (பூக்கொய். 31) கம்ப ராமாயண பாட்டுக்கு ஒத்திருக்கும். (5)

*பாடபேதம் : 1. கூடியும் குலவி 2. சிறுபோதும் பரினின் றொடித்து, பொதும்பரின் றின்றொளித்து, பொதும்பரின் றின்னொளித்து, 3. போற்குரலை.*

**வேறு**

116. **காலிற் கிண்கிணி சிலம்புக ளொலித்திடக்**
**காஞ்சன மணிக்காஞ்சிக்**
[1]**கலையி ரங்கிட வதரமும் வெளுப்புறக்**
**கண்களுஞ் சிவப்பேறக்**

**கோலக் குங்குமக் கொங்கைகள் குலுங்கிடக்**
**கொடியிடை துடியாடக்**
**குலவு நீரிடைத் தோன்றிடு தோழியர்**
**குளித்தெதிர் விளையாட**

**மாலைக் கூந்தலில் சாந்தமு மேனியில்**
**மான்மதங் கத்தூரி**
**வாடை யுங்குடை நீர்கடந் திடமுலை**
**மா**[2]**மணிக் குடநீந்தி**

**யாலிக் குஞ்சில சேடியர்** [3]**சிலருட**
**னாடுக புதுநீரே**
**யாட லஞ்சில காமசுந் தரியுமை**
**யாடுக புதுநீரே.** [6]

**குறிப்புரை :** காஞ்சனமணி காஞ்சிக்கலை - பொன் மணிகளாலான எண் கோவை மணியுடைய மேகலை; இரங்கிட - சப்திக்க; (ஒலிக்க) அதரம் - உதடு; கோலம் - அழகு;

கொடியிடை துடியாட - கொடிபோன்ற இடை உடுக்கைபோன்று ஆட; சாந்தம் - குளிர்ச்சி; மான்மதம் - வாசனைப்பொருள்கள்; வாடை - வாசனை; குடை நீர் - வினைத் தொகை; ஆலிக்கும் - களிக்கும். (6)

*பாடபேதம் : 1. கலைகளிரங்கிட 2. மணிக் குடத்துடன் 3. பலருடன்.*

117. நெருப்பிற் பூத்தபொற் பூந்தொடை மாணிக்க
நீரிடை [1]நிழற்றோன்ற
நீரிற் பூத்தபொற் பூவினைப் பாரென்று
நீரிடை யலியாமல்

விருப்பிற் செஞ்சுடர்க் கொழுந்துவிட் [2]டெரிகின்ற
விளக்கினைப் பாரென்றும்
விழித்துக் கண்களைக் கெண்டைகள் [3]மேய்கின்ற
வியப்பினைப் பாரென்றும்

பருப்ப தக்குயந் தாமரை யரும்பெனப்
பருமத்தைப் பாரென்றும்
பச்சை வெண்ணிறஞ் சிவப்பொடு பொன்னிறம்
பத்தியாய்ப் புனல்கண்டே

யரும்பு நன்னகைச் சிலதியர் விருப்புற
வாடுக புதுநீரே
யாட லஞ்சில காமசுந் தரியுமை
யாடுக புதுநீரே. [7]

குறிப்புரை : நெருப்பிற் பூத்த பொற்பூந்தொடை மாணிக்கம் நீரிடை நிழல் தோன்ற - நெருப்பைப் போன்று விளங்கும் அழகிய கொன்றை மாலையும் மாணிக்க மாலையும் நீரினிடத்தில் தன் நிழலைத் தோற்றுவிக்க; முறையே பொற்பூவும் மாணிக்கமும் நீரிற் பூத்த பொற்பூவாகவும் கொழுந்து விட்டெரிகின்ற விளக்காகவும் தோன்றின.

கண்களை விழித்துக் கெண்டைகள் மேய்கின்ற வியப்பினைப் பாரென்றும் என்று பிரிக்க; கெண்டை - கெண்டைமீன்; பருப்பதக்குயம் தாமரை யரும்பென - மலைபோன்ற முலை தாமரை யரும்புபோன்று; பருமம் - மூவாறு கோவை மணி யாபரணம்; உடலினால் பச்சை நிறமும் அழகிய மாலையினால் வெண்ணிறமும் மாணிக்க மாலையால் செந்நிறமும், தனத்தாலும் ஆபரணத்தாலும்பொன்னிறமும் நீர் பெற்ற தென்க. தனம் பசலை நிறமுற்றதால் பொன்னிறம் நீர் பெற்றது. அரும்பு நல் நகைச் சிலதியர், அரும்பு போன்ற பற்களை யுடைய தோழியர். (7)

*பாடபேதம் : 1. நிலை தோன்ற 2. எரிக்கின்ற 3. மொய்க்கின்ற*

118. பாங்கிற் றோன்றிடும் பாங்கியர் வடிவெலாம்
படிமநற் கலந்தொன்றும்
படிவிளங் கிடவொரு வர்தா மிருவராய்ப்
பார்த்ததி சயந்தோன்றக்

கோங்க ரும்பிடவே முல்லையு முகிழ்த்திடக்
குமிழுடன் [1]குலைக்காந்தட்
கூடிப் பூத்திட வண்டுக ளார்த்திடக்
கோவையின் கனிதோன்ற

வாங்கி வஞ்சியுங் காஞ்சியு மலர்ந்திட
வஞ்சியின் கொடியாட
மயிலு மன்னமும் கிள்ளையும் பூவையும்
வந்திடப் புனலூடே

ஆங்கு நின்பர மானந்தத் துறையினி
லாடுக புதுநீரே
யாட லஞ்சிவ காமசுந் தரியுமை
யாடுக புதுநீரே. [8]

**குறிப்புரை** : ''பாங்கிற்......தோன்ற'' பக்கத்தில் தோன்றிடும் தோழியர் உருவமெல்லாம் வெண்மையான நீரில் கலந்து சேரும்படி விளங்கிட அதனால் ஒருவரே இருவராகத் தெரிய அதிசயித்து கோங்கு அரும்பிட முல்லையு முகிழ்த்திட எனப்பிரிக்க ஏ-அசைநிலை; கோவையின் கனி - கோவைப் பழம்; முகிழ்த்திட - மூடிக்கொள்ள; கோங்கம்பூ தனத்தின் அழகு கண்டு அரும்புகளையிடவும் சிரிப்பினொளியால் தோற்று, முல்லை மூடவும், குமிழம் பூவொடு, தொகுதியுடைய காந்தள் பூவும் மூக்குக்கும், கைகளுக்கும் ஒத்தோம் என்று கூறி மலர, இங்ஙனம் மலர்வதைக் கண்டு வண்டுகள் சப்திக்க, கோவைக் கனிபோன்ற உதடு தெரியச் சிரித்து, வளைந்து வஞ்சியும் காஞ்சியும் மலர, வஞ்சிக் கொடி போன்ற இடையசைய, சாயல் கற்க மயிலும், நடை கற்க அன்னமும், மொழியைக் கற்கக் கிளியும் மைனாவும் நீரின் பக்கத்தில் வர அங்கு உனது பரமானந்தத் துறையினில் நீராடுக என்று பொருள் முடிபு கொள்க. (8)

*பாடபேதம் : 1. முலைக் காந்தட்.*

119. குளித்து மூழ்கியும் நீந்தியும் வாய்ந்திடுங்
கூந்தலுஞ் சரிந்தோடக்
குங்கு மத்துட னரந்தமுங் கலந்திடக்
[1]குளித்திடும் புனலூடே

ஒளித்து நீள்கரை யேறியு மோய்ந்துநின்
றொருவர்மே லொருவர்தா
முறுக்கும் வண்புன லிறைத்துமென் [2]சிவிறியி
லுறுநறும் புனலூடே

தெளித்து மங்களம் பாடியு மாடியுஞ்
சிலதியர் விளையாடத்
[3]திரைக்கு மேழ்கட லொருசிறு துளியெனச்
சிவானந்தப் [4]பெருவெள்ள

மளிக்கு நின்பெருங் கருணைபோற் பெருகநீ
யாடுக புதுநீரே
யாட லஞ்சிவ காமசுந் தரியுமை
யாடுக புதுநீரே. [9]

**குறிப்புரை** : அரந்தம் - மஞ்சள், அரத்தம் என்றது மெலித்தல் விகாரமாகியது; ஒளித்தும் நீள் கரையேறியும் ஓய்ந்து நின்று என்று பிரிக்க; உறுக்கும் வண் புனல் - பயமுறுத்தும் வளவிய நீர்; திரைக்கும் ஏழ்கடல் - அலைவீசும் ஏழு கடல்கள். (9)

*பாடபேதம் : 1. குடைந்திடும். 2. சிவிறியுமுறு 3. திரைக்கு மேழ்கட 4. பெருவெள்ளமாடுக.*

120. வாழி வாழியென் றேத்திடக் கலைமகள்
மங்களம் பலகூறி
வாழி வாழியென் றேத்திடத் திருமகள்
மகிழ்பல் லாண்டுகள்கூறி

யூழி யூழியும் வாழியென் றேத்திட
வுருத்திரை யெனுந்தேவி
யுகந்து வாழியென் றேத்திட
வொளிர்திரோ தானத்திற்

தோழி மாருடன் வாழியென் றேத்திடச்
சுகமனோன் மணிசத்தி
சூழ்ந்து மற்றுள சத்திகள் யாவருஞ்
சோபனம் பலகூற

ஆழி சூழ்புவி வாழியென் றேத்தநீ
யாடுக புதுநீரே
யாட லஞ்சிவ காமசுந் தரியுமை
யாடுக புதுநீரே. [10]

**குறிப்புரை:** உருத்திரை - உருத்திரன் மனைவி, உருத்திரன் சிவனம்சம்; திரோதானம் - காணாமல் மறைகை; பல சத்திகள் உண்டாதலால் மற்றுள சத்தி யென்றார். (10)

**(தில்லைச் சிவகாமி அம்மை பிள்ளைத்தமிழ் முற்றிற்று)**



---

நீறணிந்து ஒளிர் அக்க மணிதரித்து உயர்சைவ
நெறிநின்றுஉனக்கு ரியஓர்
நிமலமுறும் ஐந்தெழுத்து உள்நிலையு றக்கொண்டு
நின்னடிப் பூசை செய்து

[3]வீறணிந்து என்றும் ஒரு தன்மைபெறு சிவஞான
வித்தகர்ப தம்பர வும்ஓர்
மெய்ச்செல்வ வாழ்க்கையில் விருப்பமுடையேன் இது
விரைந்தருள வேண்டும்; அமுதே!

பேறணிந்து அயன்மாலும் இந்திரனும் அறிவரிய
பெருமையை அணிந்த அமுதே!
[1]பிரசமலர் மகள்கலை சொல் மகள் [2]விசய மகள்முதல்
பெண்கள் சிரமேவும் மணியே!

ஆறணிந் திடுசடையர் தில்லையம்பதிமருவும்
அண்ணலார் மகிழும் மணியே!
அகிலாண்ட மும்சரா சரமும்ஈன்றருள்பரசி
வானந்த வல்லி உமையே.

- அம்மை திருப்பதிகம் [10], வள்ளலார்.

---

1. தேன் மிகவுடைய தாமரை மலரில் இருந்தருளும் திருமகள், 2. வெற்றித் திருமகள், 3. தனிச் சிறப்பெய் தி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

(எண் - பாடல் எண்)


அகிலமுற்றும் -47
அடியிணைகள் -111
அடி தொடங்கிப் -35
அடி முடியு -72
அரகர சங்கர -58
அல்லி மலர்த்தவிசு -17
அவமதி பொன்றிட -60
அவ்விய முற்றிடு -18
அன்னையே தாயே -105
ஆதார சத்தியன் -13
ஆதி போதனிய -109
ஆறு சாத்திரம் -74
இதழ் மடித்தெயிறு -71
இரவு பகல் மதிபருதி -103
இருவினைக்களிறு -3
உருவாகி அருவாகி -2
ஊழி ஊழிதொறும் -107
எக்காலமுமே -31
எத்தனை எத்தனை -31
எள்ளில் விளைந்த -25
ஏகா மலேனந் -68
ஐந்துகரமுந் -5
ஐவரைப்பெற்றே -36
ஒரு தாய் வயிற்றும் -23
ஒரு நாலரசும் -22
ஒருவாறு முணர்வரிய -12
கட்டுறு சுருங்கிடை -32
கண் செவிக்குழை -97
கண்கள் கயலென்ன -112
கண்ணாலுனது -46
கருந்தாளகக் -54
கல்லோலங்க -24
கற்பகத்தருவுமே -34
கற்றவருக்கருள் -41
கனல்விளைக்கும் -48
கன்னியர் மணற்சிற்றில் -85
காசுலாவிய -108
காதுலாவுகுழை -110
காலிற்கிண்கிணி -116
குமரி குறுந்தொடி -59
குமரி வெற்பன் -50
குளித்து மூழ்கியும் -119
கூறுரு வைத் -19
கொங்கை வெற்பென -96
கொழிக்குங்கருணை -56
கொற்றாய் -27
சத்த மாதாவையும் -11
சத்திர சூரிய -89
சந்திர சூரியர்தமைச் -91
சித்த மகிழ்ச்சியின் -79
சிமிழினிற்றண்டரள -49
சிவனிடப்பாகத் -62
சீர்பூத்த -1
சுந்தரக் கடவுளாற் -70
சுருதி மணக்கும் -42
சூக்குமை விளங்கு -83
செங்கைச் சிவப்பினாற் -94
செந்தாமரைப்பதம் -92
செயிருற்றிடு -43
செறியுமலரிடை -102

திரிபுரசுந்தரி -57
தெள்ளுதமிழ் - (காப்பு)
தேனே கரும்பே -26
நச்சாருளமே -28
நந்தா வனங்கள் -53
நறுமலர்ப் பூங்கா -115
நாடரும் சாம்பூ -86
நால்வகைத் தோற்றமும் -8
நாறுபூமலர் -106
நித்தில முத்தரு -40
நெருப்பிற் பூத்த -117
பச்சைநிறத்தி -39
பச்சைமடக்கிளி -80
பச்சைமால் -69
பஞ்சகிர்த்திய -98
பத்திமிகுந்தவர் -77
பந்தனைப் பிணிதீர -99
பரிமளக்குழலிலணி -15
பல்லுயிர்த்தொகை -9
பவளவார்சடை -14
பழகுபெறு -88
பாகாய மொழிவஞ்சி -65
பாகீரதன்றந்த -114
பாங்கிற் றோன்றிடும் -118
பாதள முந்திள -21
பாந்தண் மாணிக்க -87
பாராட வேதண்ட -113
பிடித்திடும் கிள்ளை -95
பின்னூசலாட -101
பைம்பொன்முத்தணி -100
பொற்பூமணமே -30
பொன்மணற்சிற்றிலின் -76
மகமேருவைநேர் -52
மச்சத்துழியிற் -45
மண்பற்று கால்கள் -73
மயில்வடிவ -67
மரகதக் கிரிதோள்கள் -7
மறமலிகஞ்சுகி -61
மறிதிரைப்புணரியை -16
மறுதேருருட்டி -75
மாதவரன்பு -20
மிடருதிருந்திய -4
மின்சொரி பசும்பொன் -104
முட்டாமரைப்பொகுட் -33
முத்தார் நகையால் -44
முத்திக்கு வித்தாகி -10
முத்தி பெறுமூதண்ட -93
முத்து நிறத்தபல் -38
முற்பரதத்து -78
முற்றாமுலையால் -29
முழுமதியினமுதந் -82
முழுமுகத்திங்களொடு -66
வடிவும் பளபள -90
வடிவெலாநின்கட் -63
வலையினிற்செங் -51
வல்லதெய்வப் -84
வாழிவாழியென் -120
வாழ்வே வருக -55
விற்பகருமுத்தம் -64
வெட்சிமலர்ப்பதம் -37
வெள்ளியும் - 6

# சிவகாமி அம்மை இலக்கியங்கள்

**(எனக்குத் தெரிந்தவை)**

1. குமரகுருபரர் அருளிய
   ***தில்லைச் சிவகாமி அம்மை இரட்டை மணிமாலை***
   (வெண்பா, கட்டளைக் கலித்துறை 20 பாடல்கள்)
2. திருவருட்பிரகாச வள்ளலார் அருளிய
   ***அம்மை திருப்பதிகம்***
   (14 சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள் 10)
3. திருவருட்பிரகாச வள்ளலார் அருளிய
   ***சிவகாம வல்லி துதி***
   (எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் 1ம், அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள் 4ம்)
4. ***சிவகாமி அம்மன் அகவல்***
   (காப்புப் பாடலோடு 294 அடிகள்)
5. ***சிவகாமி அம்மன் ஊசல்***
   (எண்சீர்க் கழிநெடிலடி விருத்தப்பாக்கள் 12)
6. ***தில்லைச் சிவகாமி அம்மன் கலிவெண்பா***
   (காப்புப் பாடலோடு 108 கண்ணிகள்)
7. ***சிவகாமி அம்மன் தோத்திரம்***
   (அறுசீர்க் கழிநெடிலடி விருத்தங்கள் 10)
8. ***சிவகாம வல்லி விருத்தம்***
   (பன்னிரு சீர்க் கழிநெடிலடி விருத்தங்கள் 13)
9. ***சிவகாமி அம்மன் அந்தாதி***
   (காப்புப் பாடல் நீங்கலாக 100 கட்டளைக் கலித்துறைப் பாடல்கள்)
10. ***தில்லைச் சிவகாமி அம்மை பிள்ளைத்தமிழ்***
    (பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள் 120).
    பின் ஏழு நூல்களின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை.
11. ***தில்லைச் சிவகாமி அம்மை பிள்ளைத் தமிழ்***
    (காரைக்குடி சொக்கலிங்க ஐயா பாடியது).

உ

## புலவர். வ. ஞானப்பிரகாசம் படைப்புகள் - பதிப்புகள்

1. நால்வர் நற்றமிழ்.
2. திருநாவுக்கரசர் போற்றிய திருத்தொண்டர்கள்
3. சேக்கிழார் காட்டும் திருத்தொண்டு நெறி
4. நலமும் வளமும் தரும் நால்வர் திருப்பதிகங்கள்
5. திருக்கோவில் வழிபாடு.
6. குரு நமசிவாயர் வரலாறும் அருளிச் செயல்களும்
7. தில்லைக் கலம்பகம் (உரையுடன்)
8. கோயில் நான்மணிமாலை (உரையுடன்)
9. திருவண்ணாமலை திருப்பதிகங்கள் (உரையுடன்)
10. திக்கெலாம் புகழும் திருவாரூர்
11. திருப்புக்கொளியூர் அவிநாசி
12. சோணசைல மாலை மூலம் - உரை - கட்டுரைகள்
13. விநாயகர் திருவருள்
14. கந்த புராணம் - உரைநடை
15. திருப்பாதிரிப்புலியூர்த் தோத்திரக் கொத்து (உரை)
16. பொன்வண்ணத் தந்தாதி (உரையுடன்)
17. கோயில் திருப்பண்ணியர் விருத்தம் (உரையுடன்)
18. பன்னிரு திருமுறை வழிபாட்டுப் பாடல்கள்
19. உத்தமன் ஆகுக (திருவருட்பா கட்டுரைகள்)
20. அடித்தது போதும் (திருவருட்பா கட்டுரைகள்)
21. திருவருட்பா ஒரு கை விளக்கு (கட்டுரைகள்)
22. வள்ளலார் அருளிய குடும்ப நலம்.
23. மகாதேவ மாலை (உரையுடன்)
24. வள்ளலார் போற்றிய முப்பெருந்தேவியர்
25. வள்ளலார் பாடிய இரேணுகை.
26. வள்ளலாரும் சிவானந்தரும்
27. இருந்தமிழே உன்னால் இருந்தேன்
28. நலமான சிந்தனைகள்
29. கர்ண மோட்சம்
30. நன்னெறி - மூலம் - உரை - கட்டுரைகள்.
31. ஆத்திசூடி, கொன்றைவேந்தன் (உரையுடன்)

- மேலும் பல சைவ நூல்கள், வள்ளலார் நூல்கள்.

## இந்நூல் வெளியீட்டிற்கு உதவிய நல்லவர்கள்

*அன்பர்களின் பெயர்களுக்கு முன் சிவத்திரு (அ) திருமதி என்றும், பெயர்களுக்குப்பின் அவர்கள் என்றும் சேர்த்துப் படிக்குமாறு அன்புடன் வேண்டுகிறேன்.*

### சிதம்பரம் அன்பர்கள்

க. சுவாமிநாதன், 20 (7) தெற்குத் தேர் வீதி
சு. திருநாவுக்கரசுபிள்ளை, 9, கனகசபைநகர்
கயிலைச்செல்வர் முத்து இராமலிங்கம் செட்டியார்
கயிலை மணி ந. சுப்பிரமணியம், 59, மின்நகர்
புலவர் அ. திருஞானசம்பந்தம் 8/3 துரவடித்தெரு
ப. அண்ணாமலை, 8, சம்பந்தக்காரத்தெரு
ந. சுவாமிநாதன், M.A., B.Ed., 71, விளங்கியம்மன்கோயில்தெரு
ச. சிதம்பர நடராசன், M.A., M.Ed., 10/3 புதுப்பிள்.கோ.தெரு
இரா. இலட்சுமி, M.A., B.Ed., இராமகிருஷ்ணா மே.நி.ப.
புலவர். கோ. பாலசுப்பிரமணியன், M.A., B.Ed., பெரியார்தெரு
மு. இரத்தினசபாபதி, M.A., M.Ed., 35/13 மாலைகட்டித்தெரு
தி. சுவாமிநாதன், B.Sc., 55, மாலைகட்டித்தெரு
புலவர். நா. செல்வராசு, M.A., M.Ed., 5, மெய்க்காவல்தெரு
Rt. அ. விசுவநாதன், M.A., Ex. M.C. பெருமாள்தெரு
இரா. கருணாநிதி, M.A., M.Ed., R.C.T. மே.நி. பள்ளி
ஜா. இராகவன், M.A., 36, புதுத்தெரு
சிவநெறிச்சுடர் தி. பொன்னம்பலம், M.A., M.Phil., M.H.Ed.
Dr. R.K. நடராஜன், M.S., R.K. அறக்கட்டளை
இரா. சாமிநாதன் M.A., M.Ed., 25/14, சாத்தப்பாடி தெரு
சிவ. தண்டபாணி, அம்பலத்தாடையார் திருமடம்
வீ. சூரியமூர்த்தி, முருகன் ஸ்டோர்
சீனு. அருணாசலம், அமைப்பாளர், தி.ஆ.சை.சி.ப.மையம்
S. முத்துக்குமரன், M.A., B.Sc., M.Ed., 12. வடக்கு சந்நிதி
முத்து இராமையன், 5. பாரதிதாசன்தெரு, கனகசபைநகர்

சிவ. மணிவாசகம், M.A., M.Phil., உசுப்பூர், அம்மாபேட்டை
கி. பன்னீர்செல்வம், நளன்புத்தூர், கருப்பூர்
சுப. சுப்பிரமணியன், B.Lit., B.Ed., 35, உமாபதி சிவம் மடம்
மு. கருணாநிதி, பூந்தோட்டம்
இரா. செல்வராஜன்,M.A., M.Ed., 30, கீழ் வேங்கான் தெரு
அ. சோமசுந்தரம். 32, கீழ் வேங்கான் தெரு
புலவர். இரா. இராமலிங்கம், M.A., M.Ed., 142 சிவஜோதி நகர்
திருமதி கலாவதி M.A., B.Ed., 28, லால்பேட்டை தெரு
மா. நீலகண்டம், B.A., 10 16 கால் மண்டபம் தெரு
மா. வேணுகோபாலன், M.A., B.Ed., 51, சிவசக்தி நகர்
சோதிடரத்னா, பேராசிரியர், முனைவர், அ. சிவபெருமான்,
பேராசிரியர் முனைவர் திருமதி ப. ஞானம், (அ.ப.க.)
பேராசிரியர் முனைவர் திருமதி மு. வள்ளியம்மை, (அ.ப.க.)
பேராசிரியர் முனைவர் அ. கணேசன்
இலக்கியச் செம்மல் இர. சீனிவாசன், அண்ணாமலை நகர்
இரா. சுப்பநாதன், B.Sc., 43, இரயில்வே குடியிருப்பு
புலவர் வை. திருஞானசம்பந்தம், 18/A M.S. நகர்
S.K. கலியமூர்த்தி, படையாட்சியார், 15, மேல சந்நிதி
கு. சொக்கலிங்கம், 101, மேலவீதி

## மயிலாடுதுறை அன்பர்கள்

பேராசிரியர் முனைவர் மு. சிவச்சந்திரன், தருமபுரம்
பேராசிரியர் சாமி. கிருட்டிணமூர்த்தி, A V C கல்லூரி
பேராசிரியர் கிரு. பாண்டியன், கலைக்கல்லூரி, பூம்புகார்
முனைவர் ந. சரவணன், M.A.,Ph.D., A V C கல்லூரி

## காட்டுமன்னார்குடி அன்பர்கள்

சித்தாந்தப் புலவர் கோ. முத்தையன், A.K. மகால் தெரு
இரத்தின திருநாவுக்கரசு, M.A. B.Ed., 2 , மடவிளாகத் தெரு

## திருமலைராயன் பட்டினம் அன்பர்கள்

புலவர் த. தட்சணாமூர்த்தி, 20, திரு. வி. க. தெரு
ப. நடனபாத பண்டாரத்தையா, ஆயிரங்காளி அம்மன் மடம்

## புவனகிரி அன்பர்கள்

த. ஆபுத்திரன், 13, ஜோதி நிலையம்
இரா. அன்பழகன், M.A., M.Phil., பார்தியார் மெட்ரிக் மே.நி.ப
R. சங்கரன், சிவசங்கரி ஸ்டீல், 5/A மெயின்ரோடு

## பரங்கிப்பேட்டை அன்பர்கள்

முனைவர் ஜெ. சந்திரசேகரன், அ. ப. க. (ஓய்வு)
சித்த மருத்துவர் பா. இராஜசேகரன், M.A., M.Phil.,

## கடலூர் அன்பர்கள்

ந. முத்துக்குமாரசாமி, அமைப்பாளர், தி. ஆ. சை. சி. ப. மையம்
பா. மகாதேவ சிவாசாரியார், பாடலேச்சர் திருக்கோயில்
கயிலை மணி மு ஆறுமுகம், 6, ஆனைக்காரன் தெரு
ஆ. சிவசண்முகம். B.Com., 2, S.S.R. நகர்
வை. வீரபாண்டியன், 9, கௌசல்யா நகர்
அரிமா திருமதி உமாசங்கர், 24, சுப்பராயசெட்டித் தெரு
மு. முருகன், B.Sc.,B.L., நோட்டரி பப்ளிக், 37, தனலட்சுமிநகர்
Dr. வி.கி. கணபதி B.H., M.S., 79, தங்கராஜ் நகர்
பா. கோவிந்தசாமி, 10, போடிசெட்டி தெரு
வை. சரசுவதி, M.A., 40, பவுனாம்பாள் நகர்
மு. உமாதேவி, M.A., M.Ed , பவுனாம்பாள் நகர்
ஏ. கோதண்டபாணி, 7, பாடலேசர் நகர்
க. சோமு குருக்கள், B.Lit., 2/10 A. கட்டியக்காரத்தெரு
சொ. தியாகராஜன், 46, சந்நிதி தெரு
த. சிவபாலன், 46, திருவரசம் பிள்ளை தெரு
உ. ஆறுமுகசுந்தரம், Rt, தாசில்தார், 17, தேரடித்தெரு
கோ. பன்னீர்செல்வம், கமலா அச்சகம் 2/205 மார்க்கட் வீதி
எம் வைத்தியநாதன், ஆண்டாள் ஆர்ட்ஸ்
பொ. ஸ்ரீதரன், 71, இராஜம் நகர்
கி. இராஜாராமன், 14B இரயில்வே காலனி
என். மோகன், ஸ்ரீபார்வதி ரைஸ்மில், வண்டிப்பாளையம் சாலை
ஈ. கோமதிநாயகம், 63, வைத்திலிங்கபுரம், கூத்தப்பாக்கம்
இரா. வெங்கடேசன், M.Com., 25. தனக்கோடி நகர்
சு. சக்திவேல், B.Com., 5/126 பெருமாள்நகர்

S.B. இராஜேந்திரன், R.M.S. பாத்திரக்கடை
இரா. தங்கமணி, 5, பார்வதிபுரம், கூத்தப்பாக்கம்
சிவ. மதிவாணன், குமரப்பநாயக்கன்பேட்டை
புலவர். பொ. தம்புசாமி, M.A., B.Ed.,
பேராசிரியர் முனைவர் ந. பாஸ்கர், தூய வளனார் கல்லூரி
கோ. முருகையன், M.A., B.Ed., 13/12 முருகாலயா நகர்
கா. சூரியநாராயணன், M.A., (த) M.A. (ஆ) M.A., (வ) M.Ed ,
சொ. பஞ்சாட்சரம், M.A., M.Ed., விஜயலட்சுமி நகர்
திருவாரூர் அ. இராஜவேலு, 2, சக்தி நகர்
வே. தண்டபாணி, 24/20 சரவணாநகர், திருப்பாதிரிப்புலியூர்
அ. குப்புசாமி, B.Sc., B.Ed., 1 1, சரவணாநகர்
மு. தண்டபாணி, சுப்பராயலு நகர்
முருகாலயா வை. கிருட்டிணமூர்த்தி, B.Sc., சுப்பராயலு நகர்
பொன். சம்பந்தம், M.A., M.Ed., தண்டபாணிநகர்
இளம் முனைவர், வீ. இந்திராணி, சுப்பராயலு நகர்
ஐ.லி. மணி, கம்மியம்பேட்டை
ஜெய. இரமணி, 83/1047 சுதாகர்நகர்
பேரா முனைவர் செ. மா க. வசந்தகோகிலம், K.N.C. கல்லூரி
பேராசிரியர் க. சந்திரா. K.N.C கல்லூரி
அ. மாசிலாமணி, B.Com , M.A., 57 ஓம்சக்தி நகர், சாவடி
த. மணி, 39, ஓம்சக்தி நகர்
சீ. பானுமதி, M.A., M.Ed., (A.R.L.M.) 90, ஓம்சக்தி நகர்
பொன்முடி இளங்கோவன், M.A., M.Ed., M.Phil.,
உ. இராசமாணிக்கம், ஜோதிநகர், செம்மண்டலம்
சொ. கரம்சந்திரமோகன், (கனராவங்கி,) ஜோதிநகர்
இல. கலியமூர்த்தி, B.A., D.S.S., 40, T.N.C.S.C. நகர்
வெ. கோவிந்தசாமி, 5, K.A.P. நகர்
செ. குணசேகரன், T.N.C.S.C. கடலூர்
ப. சிவமுத்து, சிவகண் டிராவல்ஸ் S.N. சாவடி,
சிவ. நெல்லையப்பன், B.Sc., M.B.A. 5, S.S. தண்டபாணிநகர்
புலவர். இரா. அரங்கநாதன், செந்தமிழ்ச்சோலை
பெ. மெய்யழகி, 95, நண்பர்கள் நகர், சாவடி
இராம. ஜெகதீசன், கடலூர் தமிழ்ச்சங்கம்

கு. சண்முகம் குமாரசாமி, M.A., B.Ed., M.Phil.,
மு. காளியப்பன், (இரயில்வே) வில்வ நகர்
மு. இராசேந்திரன், M.Sc., M.Ed., காமராசர்நகர்
திருமதி கோ. இந்திராணி, M.A., M.Ed., ,,
கி. அலர்மேலு, M.A., M.Ed., பாடலேசர் மே. நி. பள்ளி
ஓம் சிவாய நம தொண்டு மையம். சின்னகங்கணாங்குப்பம்
புலவர். கா. சுப்பிரமணியம், செந்தமிழ்ச்சோலை
கவிஞர் காரை. பழ. ஆறுமுகம், தட்சணாமூர்த்தி நகர்
செ. இரவி, M.A., குண்டு உப்புலவாடி
சு. அருணாசலம், B.A., B.L., புதுப்பாளையம்
தங்க. சுதர்சனம், M.A., புதுப்பாளையம்
துரை. சம்பந்தம், Rtd. D.R.O. அண்ணாநகர்
ம. கலையரசு, வன்னியர்பாளையம்
பேராசிரியர் இரா. நடராசன், M.A., M.Phil., K.K. நகர்
பேராசிரியர். க. அரங்கநாதன், மீனாட்சிநகர்
V.S. குமரன், 5/24 லப்போலியர் தெரு, சொரக்கல்பட்டு
தில்லை. கோபாலகிருஷ்ணன், B.Sc., கடலூர்-3
திருதாங்கூர் சு. நாகராஜசிவம். (காமாட்சி அம்மன். தி.கோ)
ப. அசோக்குமார், B.Sc., இரயில்வே குடியிருப்பு, கடலூர்-3
சு. ஞானசேகரன், தூயதாவீது மே. நி. பள்ளி ,,
சி. இராஜசேகரன், M.A., B.Ed., 51, சராங்குதெரு ,,
சு. மாரியப்பன், கல்பனா டால்கம், கடலூர்-3
பழ. சாமிநாதன், புதுவண்டிப்பாளையம்
உ. வை. அசோகன் ,,
ஆ. வைரவேல், ,,
த. மணிமொழி, B.Sc., M.Ed., 159, கண்ணகி நகர்
தி. கலையரசி, M.A,, 19, கண்ணகி நகர்
இரா. கணேசன், 4, காளவாய் தெரு
மீனாட்சி அம்மாள், அறக்கட்டளை, வண்டிப்பாளையம்
சோதிடமாமணி பெ. தங்கராசு, புருகீசுபேட்டை
கோ. குப்புசாமி, கட்டிமுத்து தெரு, ,,
சித்தாந்தப் பேராசிரியர் சாந்து, M.A., M.Phil ,
சுப்பிரமணியபுரம்

## காரைக்காடு அன்பர்கள்

சின்ன மணல்மேடு த. இராமலிங்கம், தலைமையாசிரியர் அ.உ.ப.
இரா. அழகர்சாமி, தமிழாசிரியர், அரசு உயர்நிலைப் பள்ளி
நா. பக்கிரிசாமி, (பொ. ப. து) அங்காளம்மன் கோயில் தெரு

## ஓதியடிக்குப்பம் அன்பர்கள்

க. இராமலிங்கம், M.A., M.Ed.,
க. கிருஷ்ணசாமி, B.A., B.L.,
அ. சுந்தரராஜன்,
க, இராசலிங்கம்
அ. இராதாகிருஷ்ணன்
சு. ஜெயபாலன்
சு. இளங்கோ T.N.S.T.C.
சி. இராமமூர்த்தி
தெ. சுப்பிரமணியன்
திருமதி. ஜெகதீஸ்வரி-சிவக்குமார்
க. பழனிச்சாமி, M.P.Ed., M.Phil., அ.ப.கழகம்
ஆதி. சம்பத்குமார், வி, காட்டுப்பாளையம்
ஆ. நாராயணமூர்த்தி, இராமாபுரம் கிழக்கு

## வடலூர் அன்பர்கள்

புலவர் ஆ. முருகன், B.Lit., B.Ed., வள்ளலார் குருகுலம்
சு. கீர்த்திவாசன், M.A., M.Ed., புனித வளனார், கடலூர்-2
திருமதி சு. உஷா, M.A., M.Ed., அ.மே.பள்ளி, காடாம்புலியூர்

## நெய்வேலி அன்பர்கள்

சித்தாந்த ரத்தினம், ச. மெய்கண்டநாதன்,
,, க. அமிர்தலிங்கம், மெட்ராஸ் ஸ்டோர்

## பண்ருட்டி அன்பர்கள்

கயிலை மணி வை. ஆறுமுகம், 12/1 பொன்னுசாமிதெரு
கயிலை மணி மு. சோமசுந்தரம், 623, ஸ்டேட்பேங்க் நகர்
சித்தாந்த ரத்தினம் வே. ஜீவானந்தம், 565, காந்தி ரோடு

சித்தாந்த ரத்தினம் அர. ஜெகதீசன், 72, லிங்க் ரோடு
ஏ. புட்பலிங்கம், வழக்கறிஞர், 24 லிங்க் ரோடு
புலவர் இரா. சஞ்சீவிராயர், 1290, கணபதி நகர்
புலவர் இரா. சுவாமிநாதன், 7/B முத்தையாநகர்
சா. சண்முகம், M.A., M.Ed., 35/5 நேத்தாஜி நகர்
அரிமா T.P.T. கணேசன், வாசவி சோப் ஒர்க்ஸ்
E. கோபால், தொழிலாளர் உதவி ஆய்வாளர்
சு. பழமலை, துணை வணிகவரி அலுவலர்
புலவர். பொன்வேந்தன், M.A., 504 காந்தி சாலை
ஜீவ. கணேசன், M.Com., M.Phil., மேலக்குமாரமங்கலம்

## விழுப்புரம் அன்பர்கள்

பேராசிரியர் முனைவர் மா. சற்குணம், மயிலம்
மா. திருஞானசம்பந்தம், கீழ்ப்பெரும்பாக்கம்
புலவர் மா. திருநாவுக்கரசு, M.A., M.Ed., முண்டியம்பாக்கம்
பாலகுரு, சுந்தர் ஸ்கேல் சர்வீஸ்
ந. இராமசாமி, ஆசிரியர் ஒய்வு, பிடாகம்

## காஞ்சிபுரம் அன்பர்கள்

புலவர் அ. கருணாகரன் M.A., M.Ed.,
புலவர் வே. ஆறுமுகம், M.A., M.Ed.,
A.G. ஆறுமுகம், ஸ்ரீ செல்வ விநாயகர் ஸ்டோர்ஸ்

## புதுவை அன்பர்கள்

திருப்புகழ்க் காவலர் சேது முருக பூபதி, நீதிபதி-ஓய்வு
பேராசிரியர் க. சச்சிதானந்தம், ஈசுவரன் கோயில் தெரு
தமிழாகரர் தெ. முருகசாமி, இராதாகிருஷ்ணன் நகர்
பேராசிரியர் சிவ. மாதவன், தாகூர் கலைக் கல்லூரி
வே. முத்துக்குமாரசாமி, காமராஜ்நகர், புதுவை-11
பேராசிரியர் சு.ச. அரவணன், புதுவைப் பல்கலைக்கழகம்
வி. திருவேங்கடம், 22, செல்லான் நகர், புதுவை-11
அ. நா. ச. அப்பாதுரை, LIC முகவர், பெரிய மார்க்கெட்
அரசு ப. சௌக்கியநாதன், M.A., B.Ed., தவளகுப்பம்
சொல்லாய்வுச் செல்வர் சு. வேல்முருகன், முருங்கப்பாக்கம்

## திண்டிவனம் அன்பர்கள்

ந. சிவப்பிரகாசம், சஞ்சீவிராயன்பேட்டை
பால. பழனி, M.A., M.Ed., நல்லியக்கோடன் நகர்
மயிலம் பேராசிரியர் சு. விஜயகாந்தி ஜெயபுரம்
சி ஆறுமுகம், 312/5 பூந்தோட்டம் தெரு (தி. ஆ. சை. சி. ப)
S. பழனி, எடை அளவு பழுது பார்ப்பவர்
இளமுருகன், செந்தில் உணவு விடுதி, மயிலம் ரோடு
வீரராகவன், (எடையளவு தராசு விற்பனை) நேருவீதி
V. வெங்கடேசன், தொழிலாளர் உதவி ஆய்வர், செந்தமிழ்நகர்

## வந்தவாசி அன்பர்கள்

வ. குமரவேலு, 3, பொட்டிநாயுடு தெரு
வெ. சுந்தரேசன், M.A., M.Ed., 440 முத்துநகர்

## செய்யாறு அன்பர்கள்

புலவர் ஞான ஏகாம்பரம், M.A., M.Ed., சிவாஜி நகர்
விநாயக வீரமணி, 58/3 திருவள்ளுவர் நகர்

## காஞ்சிபுரம் அன்பர்கள்

சைவநன்மணி சரவண சதாசிவம். M.A., M.Ed.,
சிவ.க. கன்னியப்ப உடையார், சிவனடியார் திருக்கூட்டம்
சு. சதாசிவம், நிறுவுநர், திருமுறை அருட்பணி அறக்கட்டளை
M.G. இராமகிருஷ்ணன், ஸ்ரீ கலைவாணி கல்யாண மண்டபம்
பேராசிரியர் அமுத இளவழகன், பச்சையப்பன் கல்லூரி

## சென்னை அன்பர்கள்

இராம கதா ரத்னா. வே. தியாகராசன், தில்லை கங்கா நகர் (61)
வெ. இராமச்சந்திரன், மடிப்பாக்கம், சென்னை-91
பனைமூர்த்தி, 22, ஸ்டேட் பாங்க் காலனி, பெரம்பூர், செ-11
பனை அருணா, 34, பெரியார்தெரு, அயன்புரம், சென்னை-23
அ. மாணிக்கவாசகம், அயன்புரம், சென்னை-3
M. மருதவாணன், பட்டேல் சாலை, பெரம்பூர், சென்னை - 11
ஆ. ஆடலரசு, வேளச்சேரி

S. திருமாறன், பெரம்பூர்
இர. செல்வராஜ், 6, சிவானந்த நகர். சென்னை-99
புலவர் மா கி. இரமணன், திருவொற்றியூர், சென்னை-19
புலவர் திலகம் சி. வித்யாசாகர், புழுதிவாக்கம், சென்னை-91
கு. செல்வராஜ், மணப்பாக்கம், சென்னை-116
புலவர் உலோ. சுப்பிரமணியன், புதுப்பெருங்களத்தூர்
செந்திலடிமை S. சுந்தரம், கலாஷேத்ரா காலனி, சென்னை-90
பால. கோபாலன், 12/22 ஆனந்த கைலாஷ், அசோக்நகர் ,, - 83
இரா. செல்வராசு, இரா. குமார், திரு.வி.க. நகர், சென்னை-11

## ஈரோடு அன்பர்கள்

பெரும்புலவர். சிவ. ஆறுமுகம், இரயில்வே காலனி ஈரோடு-2
பா. மணிகண்டன், 23/1 ஆண்டவர் வீதி, ஈரோடு-11
முனைவர் க வீ. வேதநாயகம், கணக்கம்பாளையம், ஈரோடு-5
கி. தங்கவேலு, M.A., M.Phil., M.Ed., புன்செய்ப்புளியம்பட்டி
சாமி. இளமுருகு, புன்செய்ப்புளியம்பட்டி 638 459
S.A. சண்முகவேல், M.A., M.L., நோட்டரி, ஈரோடு - 11
இரா. மாணிக்கசுந்தரம், K.V.K. மோகன் ஹார்வேர்ஸ் ,, 3

## கோவை அன்பர்கள்

P. வடிவேல் கண்ணன், (சிவனடியார் திருக்கூட்டம், அருணோதயம், ஸ்ரீ அருணாசலா ஃபவுண்டேசன், கோயமுத்தூர் 641 001
ந. கணபதி, B.A., திருமகள் நகர், பீளமேடு புதூர், கோவை 4
ம. தங்கவேலு, N.G.O. காலனி, கோவை-22
கயிலைமணி முனைவர் திலகவதி சண்முகசுந்தரம், R.S. புரம்

## மதுரை அன்பர்கள்

A.S. இராஜராஜன், மீனாட்சி நகர், மதுரை 625 017
திருமதி கா. சசிகலா, P & T நகர், மதுரை-17
O. முத்து, சொக்கநாதபுரம், மதுரை-14

## திருநெல்வேலி அன்பர்கள்

வை. ஆறுமுகம், M.A., அப்பர் இல்லம், மகாராஜாநகர்
சிவபூசைச் செல்வர் பா. அம்பலநாதன், எழில்நகர் (SBC)

## பிறவூர் அன்பர்கள்

சித்தாந்தரத்தினம் கயிலைமணி சொ. தம்பிராசன், சீர்காழி
N.A. சின்னசாமி, உழவாரத் தொண்டர், திட்டக்குடி 606 106
K. கண்ணுசாமி, செண்பகவல்லி அம்மன் கோயில், கோவில்பட்டி
சோம. ஆறுமுகம், ஆறுமுக ஆசாரி சந்து, தஞ்சாவூர்-9
புலவர் ச. சுந்தரேசன், M.A., M.Ed., ஆர்க்காடு
ந. சுப்பிரமணிய பாரதியார், வள்ளலார் திருச்சபை, வேட்டவலம்
A. அர்த்தநாரி, தாரமங்கலம் 636 502
சித்தாந்த இரத்தினம் வீ. மருதமுத்து, திருவலஞ்சுழி, 612302
கயிலைமணி இரா. சுந்தரராசன், திருப்பூர் 641 652
பேராசிரியர் கி. சிவக்குமார், அரசு கல்லூரி, திருமுதுகுன்றம்
வேளாண்மை ஆசிரியர் பா. சுப்புசாமி, M.A., நல்லாற்றூர்
துரை. கணேசன், சோளிங்கர், 631 102
பொன். சுந்தரேசன், அப்பர் திருத்தொண்டர், வளப்பக்குடி
R. ஆவுடையப்பன், சங்கரன் கோவில் 627756
கு. கலியமூர்த்தி, M.A., M.Ed., திருக்கூடலையாற்றூர்
ஆ. பொ. சுவாமிநாதன், வெள்ளக்கோவில் 638 111
ச. கலுசிவலிங்கம், அருப்புக்கோட்டை 626 101
அ. சுப்பிரமணியன், கள்ளக்குறிச்சி
A.K. சோமசுந்தரம், B.Sc., B.Com., மீன்சுருட்டி 612 903
வைணவக்கடல் புலவர் மா. கிருஷ்ணமூர்த்தி, சேலம்-6
முருக. கே. சி. குமாரசாமி, ஆட்லிரோடு, உதகை
கம்பர் சீர்பரவுவார் வே. இராசவேலன், வாழியூர் - 632 315
சித்தாந்த ரத்தினம் கே. செல்வக்குமரன், M.A., அரக்கோணம்-1

**LIONS CLUB OF CUDDALORE CENTRAL**



**கடலூர், மத்திய அரிமா சங்கம்**

**நூலாசிரியரைப் பாராட்டுதல் (2000 - 2001)**

நிறுவுநர் : பாடலி திரு. த. சங்கர் செட்டியார் அவர்கள்

தலைவர் : திருமதி. உமாசங்கர் அவர்கள்